உ

சிவமயம்.

# சிவாலய

# சீரணோத்தாரணவிதி.




---

இது

கண்டனூர்

நா. பெ. நா. மு. முத்துராமையா அவர்கள்

பல நூல்களினின்றுந் திரட்டிச் செய்யப்பெற்றது.

பனையம்ா நகரம்

சி. மு. சின்னையா செட்டியாரவர்கள்

விருப்பத்தின்படி

மதுரை விவேகபாநுப் பிரசில்

அச்சியற்றப்பெற்றது.

1911.



உ



சிவமயம்.

# சிவாலய சீரணோத்தாரணவிதி.

## கற்பக நாயகர் துதி.

சீரமையுத் தாரணத்தைப் பாவினாற் செப்புதற்குத் தில்லை தன்னில், ஏரமையு முகில்கள்படர்ந் திமையமலை போலுயர்ந்தே யிலங்கா நின்ற, நேரமையு மேற்றிசைக் கோ புரவாயி னிதமடியார் போற்ற நிற்குந், தாரமையுங் கற்பகக்குஞ் சரமுகன்று ளெப்போதுந் தலைமேற் கொள்வாம். (க)

### குருவணக்கம். வேறு.

தேகமே தானென் றுணர்ந்துதா னுலகிற் றியங்கியே மயங்கிடச் செய்யு, மோகமா மிருளை யதஞ்செயு முமூட் சுத் துவமுள முற்றறி வுடையார்க், கேகமே வாத்து விதமதாஞ் சொரூபத் தியல்பினை யெளிதினி லுணர்த்தும், பாகமாங் கண்ட னூருறை நாக விங்கதே சிகனடி பணிவாம். (உ)

### அவையடக்கம். வேறு

தனவான்கள் செய்கின்ற திருப்பணியி னுபயோக நிமித்தமாக, இனமான வாகமநூல் சிற்பநூல் களிலியம்பு

மினியசாரக், கனமான சுலோகத்தின் படியேநற் கவிசெய்த காரணத்தால், வினையமுள பெரியோர்கள் விரும்பியே கொள்வரென விளம்பினேனால். (௩)

காமிகாகமம்.

தேவரம ராலயத்தின் சீரணத்தைக் காமிகத்திற் செப்புகின்ற, தாவதுதான் கோபுரஞ்சீ ரணமானாற் சிற்பவிதிக் கொப்பா தானுன், மேவுமிலக் கணக்குறைவாய் விதிக்கப்பட் டிருந்தான்மேல் வெடிப்புண் டானு, லேவுமிடி விழுந்திருந் தாற் சிகரத்தி லசைவுமுத விருந்த தானுல். (௪)

ஒருகோயி லமர்கின்ற லிங்கமல் லதுபீட முள்ளே சுற்றி, வருகின்ற சதுரமண் டபமிக்க வாசலொடு படிகள் சன்ன, விருமையுள பரிவார தேவதைக ளிருக்கின்ற தான மெங்கு, முருவுகெடச் சீரணமா னுலுற்ற லிங்கமதை யுடனெடுத்தே. (௫)

பாலால யங்கட்டி யவைத்துமே யாலயத்தின் பழுது நீக்கிச், சீலமாய்க் கும்பாபி டேகமுஞ்செய் தன்புடனே செய்க பூசை, யாலயத்தைச் சீரணமாய் வைத்துமே பூசைதனை யாற்றி வந்தாற், கோலமுள புத்திரர்கள் பவுத்திரர்களெல்லாமுங் குன்றிப் போகும். (௬)

சுயமான லிங்கமுதல் மற்றயலிங் கங்களையுஞ் சூழ்ந்திருக்கு, நயமான வூருயர்ந்தே கோயிற்சூழ்ந் திடுமாகி னன்

ளையில்லேப், பயமிலா தவ்வூர்க்கு மூன்றைந்தேழ் முழுமு யர்ந்திப் பனியைச்செய்து, செயமாகக் கும்பாபி டேகமு ஞ்செய் திடவேண்டுந் திகைத்திடாமல். (எ)

தரமான செற்பக் கிரகமுன் னிருந்தபடி தணிய வைத்தே, திரமாகப் பூசைய்து செய்துவந் தாலவ் வூர்தான் செழிப்பிலாம, ஆரமான வுயிர்களுக்கு மரசருக்கும் பயந்துக்க முண்டா மென்றே, வரமான காமிகத்திற் கூறுவதா லுயிர்த்துவதின் மயங்க வேண்டாம். (அ)

நிசுவாச வாகமம்.

நிசுவாச மென்கின்ற வாகமத்திற் சொல்வதுவு நிகழ்த்தக் கேண்மின், பசுபதிதா னிருக்கின்ற வாலயந்தா னுறுகுளம் பரவை தன்னால், வசங்கெட்டுச் சீரணமா னலும்பின் னூர்கண்ட மட்டதிற்கே, யிசையாமற் பள்ளமதி லிருந்தாலு முடனெடுத்தே யின்பத்தோடும். (கூ)

வேறிடத்திற் கொண்டுபோய்க் கோவிலது கட்டியே விளங்க வைத்துக், கூறியதோர் விதிப்படிக்குக் கும்பாபிடேகமதுங் கொள்ள வேண்டும், மாறியுமே யவ்விடத்திற் கட்டியே பூசைதனை வைத்து வந்தாற், பேறிலேயென் பதுமன்றிப் பெரிதான தோடமதும் பிறக்கு மாதோ. (கo)

உத்தர காமிகம்.

உத்தரகா மிகமான வாகமத்திற் கூறியதை யுரைப்பக் கேண்மின், நத்தியதோர் கிராமத்திற் கோயிலிங்கம் பலி

பிட நந்தியோடு, பத்தியுள மண்டபங்கோ புரமுதலவ் வூரு க்குப் பள்ளத் துற்றாற், புத்தியுளோ ருடனெழுப்பிக் கட்டி யே பூசைதனைப் புரிய வேண்டும். (கக)

உயர்த்தாமற் றணிவாக விருந்தபடி பூசித்தா லுண் மையாகப், பயமான காடதனிற் பிரதிட்டை பண்ணுது பா ரிலுற்ற, நியமமிலா விலிங்கத்தைப் பூசைபுரிந் ததுபோலப் பலனுமின்றி, யியல்பான சனங்களுக்குப் பீடைமுத லுண் டாகி மழையுமெய்தா. (கஉ)

மகுடாகமம்.

மகுடமெனு மாகமத்திற் கூறுகின்ற வசனமா நகர்கி ராமந், தகுதியுள பூமிக்குச் சிவாலயமற் றுலயங்க டாழ்ந்தி ருந்தால், மகிமையுள வாலயத்தை மூன்றிரண்டு முழமுயர் த்தி மதிக்கச்செய்து, மிகுதியாய்ப் பூசைமுத னடத்தவே ண் டுவததனுன் மேன்மையுண்டாம். (கங)

புரோத்கீத வாகமம்.

புரோத்கீத மென்கின்ற வாகமத்திற் கூறியதைப் புக லக்கேண்மின், தரமாகப் பூசிக்கும் பழையதல மாணுலுந் தாழ்ந்திருந்தா, லூரமேவு மூருக்குச் சமமலது மேலாக வுய ர்த்தியன்பாய்த், திரமான சத்திக்குத் தக்கபடி நான்முறை யிற் செய்யவேண்டும். (கச)

## காரண வாகமம்.

காரணவா கமமதனிற் கூறுகின் றதுமிக்க காலமான, நேரான வாலயந்தா னுருக்குப் பள்ளமாய் நேர்ந்துவிட் டாற், ருராள மாயுயர்த்திக் கட்டியுஞ்சாத் திரப்படி தான் தகைமையாகச், சீரான பிரதிட்டை செய்துமேற் பூசையி னைச் செய்யவேண்டும். (கரு)

## அசிதாகமம்.

அசிதமெனு மாகமத்திற் சொல்கின்ற வசனமதை யறையக் கேண்மின், உசிதமுள லிங்கவிமா னங்கள்சீ ரண மாகி யுற்றதானால், வசமிலா தனைவைத்துப் பூசிப்ப தூரு க்கு மகிமைக்கேடாம், பசையுளார் சீக்கிரத்திற் சீரணோத் தாரணத்தைப் பண்ணவேண்டும். (கசா)

## சுப்பிரதீப வாகமம்.

ஏர்தருஞ் சுப்பிரதீப மென்கின்ற வாகமத்திற், சீர்கெ ட வாலயங்கள் சிரணமாகிப் பள்ளத், தாருற வமைந்திரு ந்தா லுயர்த்தியே பணியமைத்துத், தேருறப் பூசைசெய் கத் தேசமுஞ் செழிக்குமாதோ. (கஎ)

## சுவாயம்பு.

சகத்தினி லுயர்வதாகுஞ் சுவாயம்பு சாத்திரத்திற், பகர்வுறு மாலயத்திற் காற்றினாற் பரவைதன்னு, லுகழுறு மிருகந்தன்னு லுபத்திரந் தெரிந்ததானற், றகவுறு மூருய ர்ந்து பணியது தாழ்ந்ததானல். (கஅ)

ஆவலாய்ப் பூசைசெய்யா துடனேயவ் வாலயத்தை, மேவுறு மிடத்தைவிட்டு விளங்கவே றிடத்திற்கட்டிப், பூவுறும் பழைபலிங்க மல்லது புதியலிங்கம், பாவுறும் படியமைத்துப் பூசைதான் பண்ணவேண்டும். (கக)

காமிகாகமம்.

திருவான் காமிகா கமமதனிற் கூறியது தேசாசாரப், பருவத்தின் படிகோவி லமைத்துடனே மூர்த்தியுமப் படியேசெய்து, வுரிமையுள பூசையுமப் படிச்செய்தே யுவப்பதுதா னுலகத்துக்குப், பெருமையாய்த் தோன்றுவதான் மாற்றிடக்கூ டாதென்றே பேசிற்றம்மா. (உ0)

அம்சமத சாஸ்திரம்.

சுயமான வம்சமத மென்கிறசாஸ் திரவசனஞ் சொல்லக் கேண்மின், நயமான வந்தந்த வாலயத்தி னுள்ளதெய்வ வளவை நாடி, செயமாக வதற்கேற்பச் சிற்பசாத் திரப்படியே விமானஞ் செய்கப், பயமிலா தேநோக்கப் படியியற்றி னற்றேடம் பலமா யுண்டாம். (உக)

அசித வாகமம்.

அசிதமெனு மாகமத்திற் சொல்கின்ற வசனமந்தை யறையக் கேண்மின், உசிதமிருத் திகைவிம்பஞ் செய்வதினு நூறுமடங் குயர் மரத்திற், சுசியான மரத்தினினு நூறுமடங் கதிகமாஞ் சுயமாஞ் செங்கல், வசியான செங்கலினுங் கன்னூறு பங்கதிக மதித்துச் செய்க. (உஉ)

## நிசுவாச வாகமம்.

நிசுவாச வாகமத்திற் சொல்கின்ற வசனமதை நிகழ்த்தக் கேண்மின், பசுமையுள தூலலிங்கஞ் சூட்சுமலிங் கங்களிலே பழுது வந்தால், உசிதமாய் முன்னளவுப் படியமைத்துப் பூசைமுத லுபசரிக்க, சுசியாகு மிவ்விரண்டு மொத்திருந்தா லில்லாதேற் றோசமுண்டாம். (உங)

## வேறு.

சிவலிங்க பீடமதிற் பீடமது சிதைவுற்றாற்
பவமகலப் பீடமது பண்ணியே பூசிக்க
வுவமையிலா விலிங்கமது வுடைந்திட்டா லதைத்தள்ளிச்
சிவலிங்கம் வேறமைத்துச் செய்திடுக பூசையினை. (உச)

பாலத்தா பனமதற்கு லிங்கமது செயவேண்டிற் பால்தானுள்ள, ஆலத்தி புரசுவில்வ மிலுப்பைபலாத் தேக்கரசு வருமை யிச்சி, மாலான சந்தனத்தோ டறுநாவற் கருங்காலி வன்னி மிக்க, சீலமாங் கல்லன்றி வேமுன்றிற் செயக்கூடாச் செப்புங்காலே. (உரு)

## அசித வாகமம்.

சிவாலயத்தின் பிரசாத மென்பதுதான் தேகமெனச் செப்பலாகும், நவமாக வுள்ளிருக்கு மிலிங்கமது சீவனைப் போல் நவிலலாகும், புவனத்தி லுளகெற்பக் கிரகமது புரியவர்கள் பிரசாதத்தோ, டுவமைசொலாக் கோபுரமுங் கட்டசித வாகமத்தி னுரைப்பதாமே. (உசா)

உயர்வான பீடமது வொன்றுநான் கைந்துமுழ மூயற்றலாகும், நயமான வொன்றுயர்வா முத்தமமத் திமமதம் நான் கைந்தாகு, மியல்பான பீடத்தி னுலுமடங் கதிகம் வைத்தே யீசனுக்கு, சுயமான கெற்பக் கிரகமது செயவசிதங் கூறுமாதோ. (உஎ)

சீரான சிற்பமதி லிங்கம்விமா னங்கெற்பக் கிரகத்துக்கு, ஏரான சங்குத் தாபனமை யத்திருந்து கிஞ்சித் திடதுபக்கம், பாரதனி லீசான்ய பக்கநோக் கிடச்செய்யப் பகர்தலாலே, நேரான கட்டிடத்து மீசான்ய மற்பமது நிகழவேண்டும். (உஅ)

சிற்பத்திற் கூறுவது கோவில்கோ புரபீடஞ் சிகர மிக்க, பற்பலவாம் பரிவார தேவதைக ளுற்றதிரு மண்டபங்கள், நற்பொருளா நடராச சபைமுதலா யினபணிகள் நயமானுலுஞ், சிற்பத்தின் படியதிலுஞ் சிரேஷ்டமாய் செய்கவெனிற் செய்க மாதோ. (உகூ)

வேறு.

தேவாலயத்தி லருச்சகர்கள் திகழுங்கெற்பக் கிரகமதில், மேவவர்த்த மண்டபத்தில் விளங்கும்பிராம ணேத்தமர்கள், காவல்புரியுஞ் க்ஷத்திரியர் காண்டற்குரிய தபனமதில், ஆவன்மேவும வைசியர்க ளழகாஞ்சோபா னந்தனில். (௩0)

இடபத்துக்குப் பின்னுலே சற்சூத்திரர்க ளின்பமுடன், திடமாய் நின்று தெரிசிக்கச் சிறந்தகெற்பக் கிரகமுதல், தடமாமண்ட பங்களையு மொன்றுக்கொன்று தரைதணிவாய், புடமா யமைத்துத் தெரிசிக்கப் புகன்றதாகமங்களுமே. (௩க)

முற்றிற்று

# சைவசமயநெறி.

---

### வாணலிங்க விலக்கணம்

நன்மதை கங்கை யமுனை யெனநவிலு
மின்னவித நன்னதியி லேய்ந்து.

அயனரியு மண்டரு மற்றசுரர் தாமும்
பயனடையப் பூசைபணி னார்.

சிவலிங்கந் தன்னிலவர் சின்னமுறு மந்தச்
சிவலிங்கந் தன்னிலது தேர்.

### வாணலிங்கமென்னும் பெயர்க் காரணம்.

வாண னெனுமசுர னர்ச்சித்தான் மந்திரத்தால்
வாணலிங்க மாகுமது மன்.

### வாணலிங்கத்தைப் பரீக்ஷிக்குமுறைமை.

துலையினிறுத் தான்முக்காற் பேதித்துத் தோன்றி
னிலையையம் வாணலிங்க மென்.

### வாணலிங்கபேதம்

உத்தமமே நீர்க்குமிழிக் கொத்தெழுந்த வாணலிங்க
மத்திமமண் டத்திணையா வந்து.

எற்றின்குட் டேறேற் கனிட்ட மிடைமெழுவா
யேற்றங் கனிட்டமிழுக் கிங்கு.

நான்கு வருணத்தார்க்கும் அதிகாராநுகுணமாக வாணலிங்கபேதம்.

வெண்மை சிவப்பு விளங்கிபிடும் பொன்கருமை
யென்னுமிவை யந்தணர்முன் னெண்

விதிப்படி கிடையாவழிக் கொள்ளுமுறைமை.

அரிதேற்பொன் னந்த மனைவர்க்கு மாகுங்
கரியசிவ லிங்கமெனக் காண்.

நான்கு வருணத்தார்க்கும் இலிங்கபீட பேதம்.

எட்டிருமூன் றீரிரண்டு கோணமந்த ணதியர்க்கு
வட்டமுறும் பீடமுழ வர்க்கு.

விதிப்படி கிடையாவழிக் கொள்ளு முறைமை

கிட்டாதேற் கோணங் கிழமை யனைவர்க்கும்
வட்டமுறும் பீடம் வரம்.

வாணலிங்க மகிமை.

நீங்காதே வாணலிங்கந் தன்னிலுறு நின்மலன்றான்
பாங்காகப் பூசையினைப் பண்.

நான்கு வருணத்தார்க்குஞ் சிவலிங்கபரிமாணம்.

பன்னிரண்டு பத்தொன்று பத்தங் குலவிலிங்க
மன்னுமறை யோர்க்கருக மாம்.

ஒன்பானெட் டேழரையர்க் கோராறைந் திரண்டு
மன்பார் வசியர்க்கே யாம்.

சூத்திரர்க்கு மூன்றிரண்டோ ரங்குலம்பீ டந்தொடங்கிப்
பார்த்தளக்கை யெவ்விடத்தும் பாங்கு.

முந்தியநான் குத்தமமே மூன்றொன்று மத்திமநள்
ளந்தியத்து நான்குமத மம்.

### பூசித்த இட்டலிங்கத்தை விடுத்த வழிப்படுங்குற்றம்.

கைக்கொண்ட லிங்கத்தைக் கைத்தழுகு கூரிலிங்கங்
கைக்கொள்ளேல் வேண்டிற் கதி.

கொண்டானை விட்டுருவங் கூர்ந்தானைக் கூடியிடு
மொண்டொடிக்குண் டோமே லுலகு.

### பூசித்த இலிங்கத்தை விடாது வேறிலிங்கமும் பூசிக்கும் முறைமை.

மற்றையொரு லிங்கத்தின் வாஞ்சையுறின் முன்னிலிங்கம்
பற்றொழியேன் மூன்றிலிங்கம் பாங்கு.

### பூசிக்கலாகும் இலிங்கத்தொகையும் ஆகாத இலிங்கத் தொகையும்.

ஒன்றுமூன் றைந்து முரித்தார்ச் சனைக்குநான்
கென்றுமிரண் டும்பிணிக்கு மேது.

ஆசாரியனையும் சிவலிங்கத்தையும் ஆராயுங்காலம்.

தேசிகன் றன்னைச் சிவலிங்கந் தன்னையுமுன்
னேசறவா ராய்ந்ததன்பின் கொள்.

இலிங்கக் குற்றங்களும் அவற்றைப் பூசித்த வழிப்படுங் குற்றமும்.

சரசரத்த வாணலிங்கந் தாரத்தைக் கொல்லு
முருகவுளம் புத்திரரை யும்.

உச்சிக் குழியி லொடுக்குமுயி ரைக்கோணி
லிச்சையுறு மில்லிழப்பிக் கும்.

களங்கங் கயரோகங் காட்டுங்காக் கைக்கால்
களைந்துவிடு மேகமுத்தைக் காய்ந்து.

இட்டங் கெடுக்கும்விந் துத்தா னிரேகைதான்
வெட்டுவிக்கும் வாளால் விரைந்து.

அதிதூல லிங்கத் தருச்சனை செய்யே
லதிநுண்மை யுஞ்சிறந்த தன்று.

ஆயு வழியு மதிக மிலிங்கமேனின்
வீயுநிதி பீட மிகின்.

பஞ்சசூத்திர விதி.

லிங்கத்தைச் சூழ்ந்துபுடை யிற்பருமை யெண்ணிடுக
லுங்கதுபீ டத்தினக லம்.

ஐந்துகூ ருக்கவத னைப்பீடத் துன்னதநான்
கொன்றுசிவ லிங்சோன் னதம்.

ஐந்துகூற் றிற்பாதி கோமுகைகண் டப்பருமை
யைந்துமதன் பாதியுமே யாம்.

பஞ்சசூத்திரவிதி பாராவழிப் படுந்துற்றம்.

பஞ்சவித சூத்திரத்தைப் பார்த்திலிங்கத் தர்ச்சனைசெய்
யெஞ்சலதி கம்ப்பூதென் றெண்.

வாணலிங்கத்துக்கு அடிமுடி வரையறுத்தல்.

முடிதூல மாமுக முன்னதமாஞ் சூக்க
மடிவாண லிங்கத்தென் றூர்.

படிகலிங்க விலக்கணம்.

சூரியகாந் தந்தன்னைச் சூழ்ந்துறும் பஞ்சினைத்தான்
சூரியன் முன்னே சுடும்.

சந்திரகாந் தந்தனைச்சூழ் பஞ்சுதனிற் றண்புனலைச்
சந்திரன் முன்னே தரும்.

இவ்விரண்டு மல்லா ததுபடிக மென்றெனுக
வவ்விரண்டி னேடொன்றே யாம்.

---

# சித்தாந்தசாராவளி.

---

லிங்கமானது சலமென்றும் அசலமென்று மிருவகையாம். பின்னும் அவையே! வ்யக்தம் வ்யக்தா வ்யக்தம் அவ்யக்தம் என்று மூன்றுவிதமாகும். அவற்றுள் சகளமான ப்ரதிமைமுதலானவை வ்யக்தம், சகளநிஷ்களமானது வ்யக்தாவ்யக்தம், நிஷ்களமானது அவ்யக்தமென்னப்படும்.

கிரகங்களில் பூஜிக்கப்பட்டது சலலிங்கம், ஆலயங்களில் ஸ்தாபிக்கப்பட்டது அசலம் ஸ்த்ரலிங்கமாகும். அந்த ஸ்த்ரலிங்கமும் தானேயுண்டானது ஸ்வயம்பூ, தேவர்களாலே ஸ்தாபிக்கப்பட்டது தைவிகம், கணேஸரால் ஸ்தாபிக்கப்பட்டது காணபம், ருஷிகளால் ஸ்தாபிக்கப்பட்டது ஆர்ஷம் மானுடராலே ஸ்தாபிக்கப்பட்டது மானுஷம் என்று ஐந்துவிதமாகும் பின்னும் படிகலிங்கம் ரத்நலிங்கம் முதலான லிங்கங்களுண்டு; அவற்றினிலக்கணம் ஞானரத்நாவலி முதலானவற்றில் கண்டுகொள்க.

இப்படிக்கொத்த லிங்கமானது அதமாதமந் துவக்கி உத்தமோத்தம பரியந்தம் ஒரு ஹஸ்தப்பிரமாண முதல் ஒன்பதுஹஸ்தப்பிரமாணம் வரையில்செய்யத்தக்கது அவற்றுள் முதல்

ஆட்யமென்னும் லிங்கத்தில்

மூவெட்டிருபத்துநாலு பாகமாகச்செய்து, அவற்றில்

ப்ரம்மவிஷ்ணுருத்ரபாகங்களுக் குயரப்பிரமாணமறியும்படி:

அடியில் ப்ரம்மபாகம் சவுக்கமாக அஉ-பங்காகும்.
நடுவில் விஷ்ணுபாக மெட்டு மூலைபாக அ-பங்காகும்.
மேல் ருத்ரபாகம் விர்த்தமாக லஉ- பங்காகும்
ஆக பங்கு உச. இது ஆட்யலிங்க விலக்கணம்.
மேல் அநாட்யமென்னும் லிங்கத்தில் அடியில் ப்ரம்மபாகம்
எத பங்காகும். நடுவில் விஷ்ணுபாகம் அ - பங்காகும்.
மேல் ருத்ரபாகம் அவ - பங்காகும்.
மேல் ஸுரேட்யமென்னும் லிங்கத்தில் அடியில்
ப்ரம்மபாகம் எ - பங்காகும்.
நடுவில் விஷ்ணுபாகம் அ - பங்காகும்.
மேலே ருத்ரபாகம் கூ - பங்காகும்.
மேல் ஸர்வஸம லிங்கத்தில் அடியில்
ப்ரம்மபாகம் அ - பங்காகும்
நடுவில் விஷ்ணுபாகம் அ - பங்காகும்.
மேலே ருத்ரபாகம் அ - பங்காகும்.




இந்தப்படி நாலுவித லிங்கங்களிலும் ப்ரம்ம விஷ்ணு ருத்ரபாகங்களுக்குச் சொல்லிய அளவெல்லாம் உயரத்தில் சொல்லப்பட்டதாகும்.

ஆனல் அகலமறியும்படி யெப்படி யென்னில்?
ப்ரம்ம விஷ்ணு ருத்ரபாகங்களோடு கூடிய

நாலுவித லிங்கங்களிலும் நீளத்தினளவை
௧௨ - பாகஞ்செய்து அதில் ஆட்யத்திற்கு ௩ - பாகமும்,
அநாட்யத்திற்கு ௫ - பாகமும்,
ஸுரேட்யத்திற்கு ௪ - பாகமும்,
ஸர்வஸமத்திற்கு ௫ - பாகமும் மூன்று பாகங்களிலும்
சரியாகவே அகல அளவாகுமென்பர்.

தாத்பரியம்.

நாலுவித லிங்கங்களுக்கும் மேலே ருத்ரபாகம் விர்த்தமாக, அல்லது ௧௬ - மூலையாக, அல்லது ௩௨ - மூலை, அல்லது ௬௪ - மூலையாகவாவது இருக்கலாம் ப்ரம்மபாகம் அடியில் நாலு மூலை, விஷ்ணுபாகம் நடுவில் எட்டுமூலையாகும். பின்னும் ப்ரம்மபாகம் நபும்ஸகம், விஷ்ணுபாகம் ஸ்திரீலிங்கம், ருத்ரபாகம் பும்ஸகலிங்கமென்றறிக. அகல அளவு ப்ரம்ம விஷ்ணு ருத்ரபாக மூன்றிற்குஞ்சரியே. நாலு மூலை எட்டுமூலை விர்த்தமென்றது நாலுவித லிங்கங்களுக்குஞ் சரியேயாகுமென்றறிக.

இதனால் நுனி விர்த்தபாகத்தில் ருத்ரனேடு சிவதத்வத்தை சத்தியந்தமாகவும், நடு எட்டு மூலையில் விஷ்ணுவோடு வித்யாதத்வத்தை ஸதாசிவாந்தமாகவும், அடி சவுக்கத்தில் ப்ரம்மாவோடு ஆன்மதத்வத்தை மாயாந்தமாகவும் நியாஸஞ் செய்ய வேண்டுமென்றுஞ் சொல்லியதாயிற்று.

ப்ராசாத தடாகங்களில் உள்ளாள அளவை மூன்றுபாக மா க்கி த்ரிகண்டநியாஸஞ் செய்யவேண்டுமென்றறிக. பின் னும் கோபுரத்திலும் த்வாரத்திலும் த்ரிகண்டநியாஸ மெப் படியென்னில்?

கோபுராக்ரத்தில் சிவதத்வத்தையும்
கோபுரகண்டஸ்தாநத்தில் வித்யாதத்வத்தையும்
கோபுரபாதஸ்தாநத்தில் ஆன்மதத்வத்தையும்,
பின்னுமப்படியே
த்வாரத்தின் கீழ்ப்படியில் ஆன்மதத்வத்தையும்
இரண்டுருவுகாலிலும் வித்யாதத்வத்தையும்
மேல்படியில் சிவதத்வத்தையும்
இப்படியாக மூன்று தத்வங்களையும்
ப்ரம்மாதி யதிதேவதைகளோடு முறையே மாயாந்த ஸதா
சிவாந்த சத்தியந்தமாக
ந்யாஸஞ்செய்யவேண்டும்.

அவதாரிகை.

சிவலிங்க ஸ்தாபநஞ் செய்தால் போகம் மோக்ஷம் இர ண்டு பலமுங் கிடைக்குமென்கிறார்.

(இதன்பொருள்)

நவஹஸ்தப் பிரமாணமுதல் ஏகஹஸ்தப் பிரமாணம் வரையில் உத்தமோத்தமாதி யதமாதமபரியந்தமாகு மெ

ன்று சிவலிங்கப் பிரமாணவிஷயத்தி லாகமங்களில் ப்ரசங்கஞ்செய்திருக்கின்றமையால் அப்படியே ஏகஹஸ்தமுதல் நவஹஸ்தம் வரையில் ப்ரமாணமுள்ளதாகச் செய்யப்பட்ட
சிவலிங்கத்தில் சிவபிரதிஷ்டைசெய்வதால்
மேலான முத்தியுண்டாகும்.
கர்ப்பக்ரஹத்திற் கநுகுணமான
ப்ரமாணத்தினாலே செய்யப்பட்ட

அதாவது கர்ப்பக்ரஹத்தி னளவை மூன்று பாகமாக்கி யொருபாகத்தில் பீடவிஸ்தாரஞ் செய்யவேண்டுமென்னும் விதிப்படி செய்யப்பட்ட
பிண்டிகையில் தேவீ ப்ரதிஷ்டைசெய்வதால்
மேலான போகமுண்டாகும்.

இவ்விடத்து பீடவிஸ்தாரஞ் சொன்னது சகல பீடங்களுக்குஞ் சரியே. பீடங்களில் விஷ்ணுபாகம் வரையில் தேவீஸ்தாபநஞ் செய்யவேண்டும். அந்த பீடம் விர்த்தமாக அல்லது சவுக்கமாக அல்லது எட்டுமூலையாக அல்லது பதினாறு மூலையாகவாவது செய்யலாம்.

பீடஸ்தாபநத்தால் போகமுண்டென்றதால் பீடமில்லாத லிங்கத்தில் ஒரு சித்தியுமில்லை. பீடலிங்கஸ் தாபநத்தால் போகமோக்ஷமிரண்டு முண்டென்றறிக.

சராசரமான சகல ஜகத்தையும் மோஹிக்கச் செய்யுஞ் சிவனது க்ரியாசத்தியே பிண்டிகையாகும்.

அந்த பிண்டிகையில்லாமல் விதிப்படி லிங்கஸ்தாபநஞ் செய்தபோதிலும் அதில் சிவன் சாந்நித்தியஞ் செய்யார், பூஜையுங் கொள்ளார்; ஆதலால் சாதகருக்குச் சகல பலத்தையுங் கொடுக்கும் பீடஸ்தாபந மவசியஞ் செய்யவேண்டுமென்பர்.

இந்த பீடப்பிரமாணமானது கர்ப்பக்ரஹப்பிரமாணாநுகுணமாகுமென்று சொல்லியது.
லிங்கப்பிரமாண விஷயத்திலும் அப்படியே சரியாகும்.

அஃதெப்படியென்னில்? கர்ப்பக்ரகப் பிரமாணத்தையைந்துபாகஞ்செய்து மூன்றுபாகத்தி லுத்தமோத்தம லிங்கமும், இரண்டு பாகத்தி லுத்தம மத்யமும், ஒரு பாகத்தி லுத்தமாதமமுஞ் செய்யவேண்டும் என்றும்; பின்னுமதையொன்பதுபாகஞ் செய்து அதி லைந்துபாகத்தில் செய்வது மத்ய மோத்தமமென்றும், இரண்டி லொருபாகத்தில் செய்வது கநிஷ்டோத்தமமென்றும், உத்தமோத்தமமுதல் அதமாதமம் வரையி லிம்முறை யறிக. இப்படி விதிப்படி செய்யப்பட்ட

பீடலிங்கமுள்ள வ்யக்த அவ்யக்த
வ்யக்தாவ்யக்தமென்னும்

மூன்றுவித லிங்கபேதங்களும்
ஸ்தாபிக்கப்படுமாகில் நிலைபெற்ற முத்தியுண்டாகும்.

ஸ்தாபித்தவன் போகத்தைக் கோறுவானாகில் போக முண்டா மென்பதற்குச் சந்தேஹமில்லை. ஆதலால்
போக விருப்பமுள்ளவனுக்கு
பலம் யாதெனில்? இப்படி பீடலிங்கஸ்தாபநஞ்செய்த
சிவாலயத்தில் இருக்கும் பரமாணுக்கள்
எவ்வளவு சங்கியை யுள்ளனவோ அவ்வளவு
கர்ப்பகாலபரியந்தம்

கைலாஸாதி சுத்தபுவநங்கள் அவர்களுக்கு வாஸஸ்தாநங்களாவதே பலமாகும். ஆதலால் சிவலிங்கப்ரதிஷ்டையின் பலம் எண்ணிமுடியாதென்றவாறு.

---

## ராசகோபுர விபரம்.

---

கோபுரங்களுக்கு விஸ்தாரத்தைப்பற்றி ஆயாமங் கொள்ள உ. ௩. ௪. ரு. இப்படி ஆயாமங்கொள்ளவும் (அதிஸ்ட்டானத்தைப்பற்றி உபபீடங்கொள்ள விபரம் சமனாகிலும், முக்காலாகிலும், அரையாகிலும், அஞ்சுபாகம்பண்ணி மூன்றுபாகமாகிலும், கவ. கஇ. கதை. உ. இப்படிச்செய்வான் காற்பரப்புக்கொள்ள விபரம். கால் உயரத்தை யெடுத்து

ஏழில் க எட்டில் க. கூ-ல் க. ௰ ல் க. கக-ல் க. கஉ-ல் க. கங-ல் க. கச-ல் க. கரு-ல் க. இப்படிக் காற்பரப்புக் கொள்வான். கோபுரங்கள் விமானங்களுக்கு அதிஸ்டானத்தைப்பற்றி உபபீடம் பத்திகொள்ள கோபுரங்கள் விமானங்களுக்கு அதிஸ்டாநத்தைப்பற்றி உபபீடங் களத்திகொள்ள விபரம். அதிட்டான உயரத்தை ௰. கூறுசெய்து இதில் க. உ. ங. ச. ரு. அதில் அதிஸ்டானத்தைப்பற்றி உபபீடங்கண்ட புரவாய்கொள்வான். உபபீடங்கண்ட பாதத்திலிருந்து சரணக்களத்திகொள்ள விபரம். தலைக்காற்பரப்பில் க, உ, ங, ச, ரு சரணங் களத்திகொள்வான். இதற்கு வகை காற்புரவா யெடுத்து ஆறுபத்தி செய்து கர்ணகூடு க, அகாரை க, சாலை உ, அகாரை க, கர்ணக்கூடு க, ஆக பத்தி ஆறும் விபரஞ்சரி. இதுவும் விஸ்தாரத்தை ஏழுபத்தி செய்து கர்ணக்கூடு க, அகாரை இ, பஞ்சரம் ஜ, அகாரை இ, சாலை உ, அகாரை இ, பஞ்சரம் இ, அகாரை ஜ, கர்ணக்கூடு க, ஆக பத்தி எ-ம் விபரஞ்சரி. இதுவும் கெண்ணியம் வேலை. உபாநாதிதூபி பரியந்தம் கால் உஅ கூறுசெய்து இதில் அதிஸ்டானம் ங, கால் உசரம் சஇ, மஞ்சம் உ, கால் ரு, மஞ்சம் உ, வேதிகை க, கழுத்து உ, பண்டி சஜ, தூபி கஜ ஆக கூறு உஅ விபரஞ்சரி. விஸ்தாரத்தை எட்டுக்கூறுசெய்து கர்ண கூடு க, சாலை உ, பஞ்சரம் இ, ஆகிலும் ஜ, ஆகிலும் ஸமமாகிலும் பஞ்சரம் கொள்ளவும். நின்ற சௌக்கத்தை நாலு அரையாய்க் கொள்ளவும். மூன்று நிலத்துக்கு உயரத்தை உச கூறுசெய்து அதிட்டாநம் உ, கால் ச, மஞ்சம் உ, தலம் ஙஜ, மஞ்சம் கஜ, கால் ஙஇ, மஞ்சம் க, வேதிகை இ, கழுத்து க, சிகரம் ஙஇ, தூபி க, ஆக கூறுவிபரஞ்சரி. நாலு

நிலத்துக்குப் பத்தி முன்போலேயே செய்க. உயரத்தை ஙகூ கூறுசெய்து அதிட்டானம் உஇ, கால் ரு, மஞ்சம் உஹ, கால் சஹ, மஞ்சம் உவ, கால் சஇ, மஞ்சம் உ, கால் ச, மஞ்சம் கஹ, வேதிகை க, கழுத்து உ, சிகரம் சஇ, ஸ்தூபி உ, ஆக விபரஞ்சரி ரு நிலத்துவகை. விஸ்தாரத்தை கக கூறு செய்து கர்ணகூடு க, அகாரை க, பஞ்சரம் க, அகாரை க, சாலை ங, அகாரை க, பஞ்சரம் க, அகாரை க, கர்ணகூடு க, இப்படிப் பத்திசெய்க. உயரத்தை சஅ கூறுசெய்து அதிட்டானம் உஹ, கால் ருஇ, மஞ்சம் உஇ, கால் ருவ, மஞ்சம் உஹ, கால் ரு, மஞ்சம் உவ கால் சஹ மஞ்சம் உ, கால் சஇ, மஞ்சம் கஹ, வேதிகை க, கழுத்து கஹ, சிகரம் சஇ, தூபி உஇ, இதுவுஞ்சரி. ஆறு நிலத்துக்குப் பத்தி விபரம். விஸ்தாரத்தை கஉ கூறுசெய்து கர்ணக்கூடு க, அகாரை கவ, பஞ்சரம் க, அகாரை கவ, சாலை ங, அகாரை கவ, பஞ்சரம் க, அகாரை கவ, கர்ணக்கூடு க, ஆக கஉ-ம் விபரஞ்சரி உயரத்தை ருள கூறுசெய்து அதிட்டானம் ங, கால் சா, மஞ்சம் உஹ, கால் ருஇ, மஞ்சம் உஇ, கால் ருவ, மஞ்சம் உஹ, கால் ரு, மஞ்சம் உவ, கால் சஹ, மஞ்சம் உ, கால் சஇ, மஞ்சம் கஹ, வேதிகை க, கழுத்து கஹ, சிகரம் சஇ, ஸ்தூபி உ ஆக விபரஞ்சரி. இப்படி ஆறுநிலஞ் செய்க. எ நிலத்துக்கு விஸ்தாரத்தை கஉ கூறுசெய்து கர்ணக்கூடு க, அகாரை இ, பஞ்சரம் க, அகாரை இ, சாலை உ, அகாரை இ, பஞ்சரம் க, அகாரை இ, சாலை உ, அகாரை இ, பஞ்சரம் க, அகாரை க, கர்ண்ணகூடு க, இதுவும்சரி. வசம் ச-க்கு கர்ணக்கூடு ச, சாலை அ, பஞ்சரம் கஉ, ஆக கூறு உசம் விபரஞ்சரி.

ஏழு நிலத்துக்கு விபரம். உயரத்தை சாசா கூறுசெய்து அதிட்டானம் ஙவ கால் சாஇ, மஞ்சம் ஙவ கால் சா, மஞ்சம்

உ௲, கால் ருஇ, மஞ்சம் உஇ, கால் ருவ, மஞ்சம் உஇ, கால் ரு, மஞ்சம் உவ, கால் சஅ, மஞ்சம் உ, கால் சஅ, மஞ்சம் கஅ, வேதிகை க, கழுத்து கஅ, சிகரம் சஇ, தூபி உ, இதுவும் விபரம்சரி.

எட்டு நிலத்துக்குப் பத்தியைக் கூறுகின்றூர். விஸ்தாரத்தை கரு கூறுசெய்து கர்ணக்கூடு க, அகாரை வ, பஞ்சரம் இ, அகாரை வ, சாலே உ௲, அகாரை வ, பஞ்சரம் க, அகாரை ௲, சாலே ௱, அகாரை ௲, பஞ்சரம் இ, அகாரை வ, பஞ்சரம் இ, அகாரை வ, கர்ணகூடு க, இதுவுஞ்சரி. வசம் நாலுக்கு கர்ணக்கூடு ச, அகாரை ௱உ, பஞ்சரம் கரு இ இதுவும் விபரஞ்சரி.

ஒன்பது நிலத்துக்கு விபரம். கால் உயரத்தை எஎ கூறுசெய்து அதிட்டாநம் ௱இ, கால் ரு, மஞ்சம் ௱வ கால் சுஇ, மஞ்சம் ௱, கால் சு, மஞ்சம் உ௲, கால் ருஇ, மஞ்சம் உஇ, கால் ருவ, மஞ்சம் உஇ, கால் ரு, மஞ்சம் உவ, கால் ச௲, மஞ்சம் உ, கால் சஇ, மஞ்சம் க௲, வேதிகை க, கழுத்து க௲, சிகரம் சஇ, தூபி க௲, இதுவுஞ்சரி.

ஒன்பது நிலத்துக்குப் பத்திமுறை கூறுகின்றூர். விஸ்தாரத்தை கசு கூறுசெய்து கர்ணக்கூடு ௨, அகாரை ௲, மஞ்சம் க, அகாரை ௲, அதிட்டாநம் க, அகாரை ௲, பஞ்சரம் க, அகாரை ௲, சாலே உ, அகாரை ௲, பஞ்சரம் க, அகாரை ௲, அதிபீடம் க, அகாரை ௲, பஞ்சரம் க, அகாரை ௲, கர்ணகூடு க, ஆக விபரஞ்சரி. வசம் ச௨, கர்ணக்கூடு கஉ, பஞ்சரம் கசு, அகாரை ௱உ, சாலே ச, இதுவுஞ்சரி.

பத்து நிலத்துக்கு விபரமாவது. உயரத்தை அஅ கூறுசெய்து அதிட்டாநம் ௱௲, கால் எஇ, மஞ்சம் ௱இ, கால் எ, மஞ்சம் ௱வ, கால் சுஇ, மஞ்சம் ௱, கால் சுவ, மஞ்சம் உ௲, கால் ருஇ, மஞ்சம் உஇ, கால் ருவ, மஞ்சம் உஇ,

கால் ௫, மஞ்சம் ௨வ, கால் ௪ஜ, மஞ்சம் ௨, கால் ௪, மஞ்சம் ௪ஜ, வேதிகை ௧, கழுத்து ௧இ, சிகரம் ௪இ, தூபி ௧ஜ இதுவும் விபரஞ்சரி. பத்திமுன் ஒன்பது நிலத்துக்குச் சொன்ன பத்திப்படி செய்க.

௧௧ நிலத்துக்கு வகை. உயரத்தை ௱ கூறுசெய்து அதிட்டானம் ௪, கால் ௮, மஞ்சம் ௩ஜ, கால் ௭இ, மஞ்சம் ௩இ, கால் ௭, மஞ்சம் ௩வ, கால் ௬இ, மஞ்சம் ௩, கால் ௭, மஞ்சம் ௨ஜ, கால் ௫இ, மஞ்சம் ௨இ, கால் ௫வ, மஞ்சம் ௨இ, கால் ௫, மஞ்சம் ௨வ, கால் ௪ஜ, மஞ்சம் ௨, கால் ௪இ, மஞ்சம் ௧ஜ, வேதிகை ௧, கழுத்து ௧இ, சிகரம் ௪இ, தூபி ௧ஜ இதுவிபரஞ்சரி.

௧௧ நிலத்துக்குப் பத்தி கூறுகின்றார். விஸ்தாரத்தை ௧௫ கூறுசெய்து கரணக்கூடு ௧, அகாரை இ, பஞ்சரம் இ, அகாரை இ, சாலை ௨, அகாரை இ, பஞ்சரம் இ, அகாரை இ, கர்ணக்கூடு ௧, வசம் நாலுக்கு சாலை ௧௨, கர்ணக்கூடு ௪, பஞ்சரம் ௧௬, அகாரை ௩௨, இதுவும்சரி.

௧௧ நிலத்துக்கு விபரம். உயரத்தை ௱௧௩ கூறுசெய்து அதிட்டானம் ௪இ, கால் ௮இ, மஞ்சம் ௪, கால் ௮, மஞ்சம் ௩ஜ, கால் ௭இ, மஞ்சம் ௩இ, கால் ௭, மஞ்சம் ௩வ, கால் ௬இ, மஞ்சம ௩, கால் ௬, மஞ்சம் ௨ஜ, கால் ௫இ, மஞ்சம் ௨இ, கால் ௫வ, மஞ்சம் ௨இ, கால் ௫, மஞ்சம் ௨வ, கால் ௪ஜ, மஞ்சம் ௨, கால் ௪இ, மஞ்சம் ௧ஜ, வேதிகை ௧, கழுத்து ௧இ, சிகரம் ௪இ, தூபி ௧ஜ இது விபரஞ்சரி. ௬பட

ஒருநிலக்கோபுரத்துக்கு.

உபானந்துடங்கி தூபி அறுதியாக எட்டு அம்சம் செய்து ஒரு அம்சம் அதிட்டானம் இரண்டு அம்சம் கால்நீள ஒரு அம்சம் பிரஸ்தரம் ஒரு அம்சம் கழுத்து இரண்டு அம்சம் சிகரம் ஒரு அம்சம் ஸ்தூபி. ஆகச்சரி.

# வித்தியாபாநு.

இம்மாதாந்தத் தமிழ்ப்பத்திரிகை சௌமியஹு சித்திரைமீ முதல் "மதுரை விவேகபாநு அச்சியந்திரசாலை" யிலிருந்து வெளியாகி வருகிறது ஒவ்வொரு விஷயமும் இலக்கணப்பிழையின்றி தெளிவான நடையில் எழுதப்படுகிறது. பாஷாஞானமும், பகவத்பக்தியும், நல்லொழுக்கமும், தெளிந்த பத்தியும் உண்டாக்கத் தக்கனவாக தமிழிலும் ஆங்கிலத்திலும் வல்ல பண்டிதர்கள் பலர் விஷயதானஞ் செய்துவருகிறார்கள்.

சந்தா விவரம்—வருஷம் 1-க்கு (தபாற்கூலியுள்பட) ரூபாய் 2 மாணவர்கட்கு மட்டும் ரூபா 1. (தபாற்கூலி வேறு) தனிப்பிரதி 3 அணா.



விளம்பர விகிதம்.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| ஒருபக்கம் | 1 | மாசம் ரூ | 2-8-0 | அரைப்பக்கம் | 1 | மாசம் ரூ | 1-8-0 |
| ,, | [illegible] | ,, | 6-0-0 | ,, | 3 | ,, | 3-8-0 |
| ,, | 6 | ,, | 11-0-0 | ,, | 6 | ,, | 6-0-0 |
| ,, | 1 | வருஷம் | 18-0-0 | ,, | 1 | வருஷம் | 1-0-0 |

1 அணா ஸ்டாம்பு அனுப்புவோர்க்கு புஸ்தக ஜாப்தா ஒன்றும், கார்த்திகைமகிமை, சோமவாரமகிமை, யானையெய்தபடலம் இம்மூன்று புஸ்தகங்களும் அனுப்பப்படும்.

மு. ரா. கந்தசாமிக்கவிராயர்,

பத்திராதிபர், மதுரை.